### *Baby food*

* 638 *Q*.—SRI A. A. RASHEED AND SRI M. KARUNANITHI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have recommended to the Union Government for the relaxation in the import of the baby food in view of the fact that the prices of baby food have increased abnormally recently;

(*b*) whether there is any proposal to start a baby food factory by Government in Ootacamund; and

(*c*) if so, when?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) & (*c*) A proposal to set up a baby food factory in the Nilgiris is under the consideration of the Government.

SRI A. A. RASHEED : Is it a fact that Dumex and Glaxo Companies have come forward to open a factory at Ootacamund and if so, will their services be utilized?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no such information.

**SRI P. U. SHANMUGAM** : குழந்தைகளின் உணவின் விலை மிகவும் ஏறிக்கொண்டே போகிறது. இதைத் தடுக்கச் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : குழந்தைகள் உணவு எல்லாம் இறக்குமதி செய்யப்படுவைதான், இந்த நாட்டில் உற்பத்தி செய்யப்படுவை அல்ல. குழந்தைகள் உணவின விலை ஏறுவதைத் தடுப்பதற்கு, சர்க்கார், " கண்ட்ரோல் " முறையைக் கொண்டுவராமல் வேறு வழிகளில் தடுக்க முயற்சிக்கிறது. அதற்காக சர்க்கார், குழந்தைகள் உணவின் மொத்த வியாபாரிகளைக் (ஹோல்ஸேல் டீலர்ஸ்) கூப்பிட்டுப் பேசியது ; அவர்கள் ஒரு ஒப்பந்தத்திற்கு வந்திருக்கிறார்கள். ஒப்பந்தத்தின் அம்சங்களைக் குறிப்பிடுகிறேன். அவர்களுடைய " டீலர் "களையெல்லாம் " சிவில் ஸப்ளைஸ் கமிஷ "னிடம் ரெஜிஸ்டர் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு ரெஜிஸ்டர் செய்யும்போது, அவர்கள் 25 சத விகித லாபத்திற்கு மேல் குழந்தைகள் உணவை விற்கக்கூடாது என்று நிபந்தனை விதிக்கப்படும். அந்த நிபந்தனையை மீறுபவர்களுடைய பெயர்கள் " ரெஜிஸ்டிரேஷன் " லிருந்து நீக்கப்படும். இந்த ஏற்பாட்டின் விளைவாக, சமீபத்தில் சில நாட்களாகக் குழந்தைகள் உணவு குறைந்த விலைக்கு விற்கிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is it a fact that some of the foreign companies also have applied for the starting of this factory?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No foreign company has applied. The matter was under examination. At present there is no application pending from any foreign company. But the baby food factory which I have referred to in my answer, is proposed to be taken up by a co-operative society with the technical assistance of another Dairy Co-operative Society in Denmark.

SRI S. LAZAR : குழந்தைகளின் உணவுப் பொருள்கள் போதிய அளவு கிடைக்கவில்லை என்பது சர்க்காரின் கவனத்திற்கு வந்திருக்கிறதா ? அப்படியானால், அவை போதிய அளவு கிடைக்கச் செய்வதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குழந்தைகளின் உணவுப் பொருள்கள் அந்நிய நாடுகளிலிருந்து வரவழைக்கப்படுகின்றன. அவை போதிய அளவு கிடைக்கவில்லை என்று சொல்வது சரியல்ல. அவை போதிய அளவில் கிடைக்கவில்லை என்ற தகவல் சர்க்காருக்கு இதுவரையில் வரவில்லை.

SRI A. A. RASHEED : Is it a fact that the Government of India have liberalized the import of baby foods for the next period ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information about it.

SRI S. RAMAKRISHNA THEVAR : வெளிநாடுகளிலிருந்து போதிய அளவு இறக்குமதியாகாததால்தான், உணவுப் பொருள்களின் விலை ஏறிக்கொண்டு போகிறது என்று சொல்லப்படுகிறது. குழந்தைகளின் உணவுப் பொருள்களை இந்த நாட்டிலேயே ஏன் தயாரிக்கக்கூடாது ? இங்கே உற்பத்தியாகும் அரிசி, கேப்பை முதலிய தானியங்களைக் கொண்டு குழந்தைகள் உணவை தயாரிக்கக்கூடாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூலக் கேள்வியிலும் இது சம்பந்தமாகக் கேட்கப்பட்டிருக்கிறது. அதற்கு நான் முன்பே விடையளித்தேன். குழந்தைகள் உணவைத் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றை உதகமண்டலத்தில் அமைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

*Home for young orphan girls*

* 639 *Q*.—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) at what places Homes are run for the protection of young orphan girls by the Government and private agencies in the Madras State ;

(*b*) the number of orphan girls in each Home;

(*c*) how many of them have been married off; and

(*d*) the amount provided by the Government towards grants for these Homes in 1958–59?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : மேற்கண்ட விடுதிகளில் 1,214 அனாதை இளம் பெண்கள் இருப்பதாக தெரிகிறது. ஆனால் அதில் 37 பேர்களுக்குத்தான் திருமணம் ஆகியிருப்பதாக குறிப்பில் காணப்படுகிறது. ஆகவே, இந்த விடுதிகளில் இருக்கும் பெண்களை திருமணம் செய்து கொள்ள முன்வருகிறவர்களுக்கு சர்க்கார், ஊக்கம் அளிக்கும் முறையில், சர்க்கார் காரியாலயங்களிலும் முக்கியமான தொழிற்சாலைகளிலும் உத்தியோகம் கொடுப்பதுபற்றி பரிசீலிக்குமா ?

ஜோ.

[a] Printed as Appendix III on pages 1126–1127 infra.